Registered No. M. 2330

"SIDDHANTHAM'
Vol. 35—No. 4



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 35 | பிலவ சித்திரை 1962 ஏப்ரல் | இதழ் 4

உள்ளுறை



பத்திராசிரியர்: புலவர் - முருகவேள், எம். ஏ., எம். ஓ. எல்.

உதவிப் பத்திராசிரியர்: மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்

12, கிழக்கு மாடவீதி, மயிலாப்பூர், சென்னை-4.

ஆண்டு சந்தா ரூபா 3

தனிப்பிரதி அணு

# சமாஜத் தேர்வுகளின் பாடத்திட்டம்

oooooo

## இளஞ்சைவப் புலவர்

1. இலக்கணம்: நன்னூல் காண்டிகை ஆறுமுகநாவலர், நம்பியகப் பொருள், யாப்பருங்கலக் காரிகை, தண்டியலங்காரம். 2. இலக்கியம்: திருமுருகாற்றுப்படை, கந்தர் கலிவெண்பா, கந்தர் அலங்காரம், கந்தர் அனுபூதி, நால்வர் நான்மணி மாலை, சோணசைல மாலை, நீதிநெறி விளக்கம், திருக்குறள் அறத்துப்பால் (பரிமேலழகர் உரையுடன்) சுந்தரர் தேவாரம் முழுதும். 3. சாத்திரம்: திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார், உண்மை விளக்கம், திருவருட் பயன், கொடிக்கவி, வினாவெண்பா. 4. உரைநடை: முருகன் அல்லது அழகு (திரு.வி,க.), வாகீசர் அல்லது மெய்யுணர்வு (சிவக்கவிமணி), பட்டினத்தார் வரலாறும் நூல் ஆராய்ச்சியும், தாயுமானவர் வரலாறும் நூல் ஆராய்ச்சியும் (கா. சு. பிள்ளை, M. A., M. L.) பெரிய புராணவசனம், திருவிளையாடற் புராண வசனம் (ஆறுமுகநாவலர்)

## சைவப் புலவர்

1. இலக்கணம்: தொல்காப்பியம் எழுத்ததிகாரம் (நச்சினார்க்கினியர்),சொல்லதிகாரம் (சேனாவரையம்) பொருளதிகாரம் (இளம்பூரணம்), தருக்கசங்கிரகம் (சிவஞான முனிவர்) 2. இலக்கியம்: பெரியபுராணம் (திருஞானசம்பந்தர் புராணம் முழுவதும்), திருவிளையாடற் புராணம் மதுரைக் காண்டம்,கந்தபுராணம் தட்சகாண்டம், திருக்குறள் பொருட்பால் (பரிமேலழகர் உரையுடன்), அப்பர் தேவாரம் முழுமையும், திருவாசகம் முழுதும், திருக்கோவையார் 200பாடல்கள் (பேராசிரியர் உரையுடன்) 3. சாத்திரம்: சிவஞான போதச் சிற்றுரை, சிவஞான சித்தியார் சுபக்கம் (சிவாஞனமுனிவர் உரை) சிவப்பிரகாசம், சங்கற்ப நிராகரணம். 4. உரைநடை: சைவசித்தாந்த ஞானபோதம் (மறைமலை அடிகள்) சிவஞான சித்தியார் ஆராய்ச்சி (ந.சிவகுருநாத பிள்ளை) திருக்குறளின் உட்கிடை சைவசித்தாந்தமே (க. வச்சிரவேலு முதலியார்) சிவஞானமுனிவர் உரைநடை நூல்கள், பெரிய புராண சூசனம் (ஆறுமுகநாவலர்) திராவிடப் பிரகாசிகை (சபாபதி நாவலர்)

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு.

மலர் 35 | பிலவ சித்திரை 1962 ஏப்ரல் | இதழ் 4

## ஞானத்திறம்

(ந. ரா. முருகவேள்)

முன்னுரை :

" சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை யறமாற்றும் பாங்கினில்ஓங் கியஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாம்உணர்ந்தார் அந்நிலையில் "

எனவரும் பெரிய புராணத் திருப்பாடலைச் சிவநேயச் செல்வர்கள் அனைவரும் பெரும்பாலும் அறிந்திருப்பர். பெரிய புராணத்தின்கண் பேரொளி வீசிச் சுடர்ந்து திகழும் சிறந்துயர்ந்த செய்யுள் மணிகள் பலவற்றுள் இஃதொன்று ஆகும். சீர்காழியில் பிரமதீர்த்தக் கரையில் திருத்தோணிச் சிகரம் பார்த்து 'அம்மே அப்பா' என அழைத்து அழுத பொழுது, யாவருக்கும் தந்தை தாய் என இலங்கும் சிவ பெருமானும் தேவியாரும் எழுந்தருளி, எண்ணரிய சிவ ஞானத் தின்னமுதம் குழைத்து ஊட்டியருளிய நிலையில், ஆளுடைய பிள்ளையார் அகில தேவருக்கும் முனிவருக்கும் தெரிவரிய பொருளாகும் தாவில்தனிச் சிவஞான சம்பந் தர் ஆயினர் என்னும் செய்தியினை விளக்குவது, இச் சிறந்த செய்யுள்.

அறிஞர்களின் சொற்போர் :

இச் செய்யுளின் பொருள்பற்றி இற்றைக்கு 60 அல் லது 70 ஆண்டுகட்கு முன்னர் அறிஞர்களிடையே மிகப்

பெரியதொரு சொற்போர் நிகழ்ந்தது. யாழ்ப்பாணம் வட கோவைச் சபாபதி நாவலர், சைவ சித்தாந்த சண்டமாருதம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர நாயகர், காசிவாசி செந்தில் நாத ஐயர், மகாவித்துவான் மதுரைச் சபாபதி முதலியார் போன்ற பேரறிஞர்கள் பலர் அச் சொற்போரின்கண் ஒருவரை ஒருவர் இகலி நின்றனர். ஞானபேதத் தெளிவு, ஞானபேதத் துணிவு, ஞான சூடாமணி, ஞானபேதவிளக்கச் சூறுவளி, ஞானபேத விளக்க மறுப்பு என்பன போன்ற பற்பல நூல்கள், இப்பெரிய புராணச் செய்யுளின் பொருளை ஆராயும் நோக்கத்துடன் எழுதப்பட்டு வெளிவந்துலாவின. இங்ஙனம் பேரறிஞர்கள் பலரின் ஆராய்ச்சிக்கு அடிப்படையாக அமைந்த இச்செய்யுளின் பொருளை, நாமும் இயன்ற வாற்றல் உணர்ந்துகொள்ளுதல், நம்மனோர்க்கு மிகவும் நலம் பயப்பதாகும்.

**செய்யுட் பொருள் :**

சிவபெருமானது திருவடியையே சிந்திக்கின்ற அருட் செல்வம் பெருகுதற்குக் காரணம் ஆகிய நல்ல ஞானத்தையும், பிறவிக்குக் காரணம் ஆகிய மலமாயா கன்மங்களை அறவே ஒழிக்கின்ற பணிநிற்றலால் எய்தும் உயர்ந்த ஞானத்தையும், ஒப்பு இல்லாத முழுநிறைவான கலைஞானத்தையும், தேவரும் முனிவரும்கூட உணர்தற்கரிய உண்மை ஞானத்தையும், முதன்மையான தவப்பேற்றினையுடைய ஆளுடைய பிள்ளையார், தமக்கு அம்மையப்பர் ஞானப்பால் ஊட்டியருளிய அந்நிலையிலேயே உணரப்பெற்றார்

என்பது, மேற்குறித்த பெரிய புராணச் செய்யுளின் பொருள். 'நவில்தொறும் நூல் நயம் போலும்' என ஆசிரியர் திருவள்ளுவர் குறிப்பிட்டதற்கேற்ப, இச் செய்யுளை நுணுகி யுணருந்தொறும் இனிய பல சிறந்த கருத்துக்கள் தோன்றுதல் காணலாம்.

இச் செய்யுள் நாற்சீர்களான் இயன்ற கலி விருத்தம். 'நாடிய சத்திநிபாதம் நாலு பாதம்' என்றபடி, மந்தம் மந்ததரம் தீவிரம் தீவிரதரம் என நால்வகைப்படும் சத்திநிபாதத்துள், ஆளுடைய பிள்ளையார் மேலான ஞானநிலையினை

எய்துதற்குரியவராக நாலாம் சத்திநிபாதம் முற்றிய நிலையிற் சிறந்து திகழ்ந்தார் என்பதனைக் குறிப்பிக்க, ஆசிரியர் சேக்கிழார் பெருமான் இச் செய்யுளை நாற்சீர்களான் அமைத்தருளிய அருமைப்பாடு அறிந்து மகிழ்தற்குரியது.

சிவனடியே சிந்திக்கும் ஞானம் :

1. வீடுபேற்றின்பம் எய்துதற்குரிய தவநலம் மிக்குடையவராய்ப் பிறந்த மெய்யடியார்கட்கு, அப்பிறப்பில் 'தெய்வம் என்பதோர் சித்தம்' உண்டாதலும், அத் தெய்வமும் ஏனையோர் அல்லர் சிவபெருமானே எனத் தெளிதலும் ஆகிய ஞானம் ஒருதலையாக நிகழும். ஆளுடைய பிள்ளையாருக்கு அத்தகைய ஞானம் நிகழ்ந்ததனால் விளைந்த சிந்தனையைச் 'சிவனடியே சிந்திக்கும்' எனவும்; அச் சிந்தனையால் தொட்டனைத் தூறும் மணற்கேணிபோல மேன்மேலும் சிறந்த பல நலங்கள் வளர்ந்து பெருகுதலின் 'திருப் பெருகு' எனவும்; தான் என்னும் முனைப்புச் சற்றும் இன்றிச் சிவனருளே துணையாகக்கொண்டு ஒன்றி நின்று சிந்தித்தலின் அவ்வுணர்வினைச் 'சிவஞானம்' எனவும் ஆசிரியர் கூறியருளினர்.

'சிவனடியே' என்பதில் ஏகாரம் பிரிநிலை. நம்மனோர் போல அஞ்ஞானம் விளைக்கும் பிறபொருள்களைச் சிந்திக்காமல், ஞானம் விளைக்கும் சிவபிரான் திருவடியினையே ஆளுடைய பிள்ளையார் சிந்திக்கப் பெற்றார் என்பது கருத்து. நற்பொருள்களைச் சிந்திக்கப் பெறுதலே ஒரு சிறந்த பேறு ஆதலின், சிந்தித்தலையே திரு என்றார். 'சிந்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க வந்திடும் அவ் ஒளிபோல மருவி, அரன்உளத்தே வரவர வந்திடுவன்'(சித்தியார்:301) என்றாற்போல, இனிது சிந்திப்பார் உணர்வின்கண் சிவம் படிப்படியே வந்து அமர்ந்து விளங்கித் திகழ்தலின் அச் சிந்தனையுணர்வு 'சிவஞானம்' எனப்பட்டது. பிற் கூறப் பெறும் ஞானங்களும் சிவஞானமே யாதலின், ஈண்டுச் சிவஞானம் என்பதனை 'நல்ல ஞானம்' எனக் கொள்ளுதலும் அமையும். 'சிவம்' நன்மை எனப் பொருள்படும்,

பாங்கினில் ஓங்கிய ஞானம் :

2. மேற்குறித்த சிந்தனைக்குப் பின்னே நிகழ்வதாக லானும், பவத்தினை ஒழித்தற்கு இன்றியமையாததாக லானும், இறைபணியின் நிற்றலையுணர்த்தும் ஞானத்தைப் 'பவமதனை அற மாற்றும் ஞானம்' எனவும்; அது யாகம் முதலிய கன்மப்பயன் போல அனுபவமாத்திரத்தால் அழிந்தொழியும் இன்பம்போல் அன்றி அழியாத வீடுபேற்றின்பத்தைத் தவறாது அளிக்கவல்ல தன்மையதாதலின் 'பாங்கினில் ஓங்கிய ஞானம்' எனவும் கூறினர். "தானம் யாகம் தீர்த்தம் ஆச்சிரமம் தவங்கள் சாந்திவிரத கன்ம யோகங்கள் சரித்தோர், ஈனமிலாச் சுவர்க்கம் பெற்று இமைப்பளவின் மீள்வர்; ஈசன் யோகக் கிரியா சரியையினில் நின்றோர் ஊனமிலா முத்தி பதம் பெறுவர்'' என்பது சிவஞான சித்தியார்.

பவம் பிறவி. அஃது ஈண்டுப் பிறவிக்குக் காரணமான ஆணவம் மாயை கன்மம் என்னும் மலங்களை யுணர்த்தியது. ஆகுபெயர். 'அற மாற்றல்' வேர் அறுத்தல். 'மதனுடை நோன்றாள்' என்புழி மதன் அறியாமையைக் குறிக்குமாகலின், 'பவமதனை' என்பதற்குப் பிறவிக்குக் காரணமான அறியாமையை எனவும் பொருள் கூறுவர். பாங்கு முறைமை, உரிமை, பணிசெய்தல். சிந்தனைக்குப் பின் நிகழுமமுறைமைத் தாகலின் பணிசெய்தலைப் 'பாங்கு' என்றார். சிந்தித்தலால் நிகழும் தொடர்பினும் பணிசெய்தலாற் பெறும் தொடர்பு உரிமை மிக்கதாதல் பற்றிப் 'பாங்கு' என்றார் எனினும் அமையும். 'பாங்கு' உரிமையும் பணி செய்தலும் குறித்தலை 'ஆங்கவர்க்கே பாங்காவோம் அவர் உகந்து சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணி செய்வோம்' எனவரும் திருமொழியால் உணரலாம். 'பாங்கினில்' என்புழி இல் ஏதுப் பொருண்மை குறித்து வந்தது. 'கல்வியிற் பெரியன் கம்பன்' என்புழிப் போல. ஞானம் ஓங்கியஞானம்ஆதற்குப் பணி காரணமாயிற்று. 'காக்கையிற்கரிது களம்பழம்' என்புழிப் போல 'இல்' உறழ்பொருளில் வந்த ஐந்தனுருபு எனக்கொண்டு, பிறவியை அறமாற்றுதலில் சிந்தனையைக் காட்டிலும் பணிசெய்தல்

சிறந்தது எனக் கொள்ளினும் அமையும். பணிசெய்த லாற்பவம் அறும் என்பதனை 'இறைபணி நிற்க மலமாயை தன்னொடு வல்வினையின்றே' எனவரும் சிவஞான போத நூற்பாவால் உணரலாம். தலங்கள் தோறும் சென்று திருப் பதிகம் பாடுதல் ஆளுடைய பிள்ளையார் செய்த அரும்பணி யாகும். திருப்பதிகம் பாடும் திருத்தொண்டின் தெளித துணர்வே ஈண்டுப் 'பாங்கினில் ஓங்கிய ஞானம்' எனச் சிறப்பிக்கப்பட்டது.

உவமையிலாக் கலைஞானம்:

3. எண்ணிறந்த வேதாகமங்களையும் ஏனைய பல கலை களையும் ஓதி உணர்தல் கானேயாவர்க்கும் அரிதாகவும், ஓதாமலே எக்கலையினையும் முற்ற உணர்ந்ததுடன்,

''பன்மறையோர் செய்தொழிலும் பரமசிவா கமவிதியும்
நன்மறையின் விதிமுழுதும் ஒழிவின்றி நவின்றனையே''

என்றதற்கேற்ப, வேதாகமங்களின் சாரங்களையெல்லாம் ஒருங்கு தொகுத்துத் தம்பணியாகிய திருப்பதிகங்களில் அமைத்துப் பாடும் ஆற்றலும் ஆளுடைய பிள்ளையார்க்கு வாய்த்தமையின் 'உவமையிலாக் கலைஞானம்' என விதந்து ஓதப்பட்டது. 'உவமையிலா' என்ற அடைமொழி கலைஞானத்தையன்றி, அதனை ஓதாதே யுணர்ந்து கைவந்த பிள்ளையாரின் இணையற்ற தன்மையினைச் சிறப்பித்து நின் றது. ஏனைக் கலை ஞானங்களினும் மேம்பட்ட தத்துவ ஞா னத்தை 'உவமையிலாக் கலைஞானம்' என்றார் எனினும் பொருந்தும்.

ஆளுடைய பிள்ளையார் 'பண்டை நற்றவத்தால் தோன் றிப் பரமனைப் பத்தி பண்ணும் தொண்டர்' ஆகிய சாமு சித்தர் ஆவர். ஆதலின் அவர் முன்புசெய் தவத்தின் ஈட் டம் மிக்குடையவராகப் பிறந்கி ஒளிர்ந்தனர். எனவே முற் பிறப்புக்களிலேயே அவர் கலைஞானங்களெல்லாம் கை வரப் பெற்றிருந்தார். செவ்வி முதிர்ந்த தாமரையின் நாளரும்புகளை ஞாயிறனது அலர்த்துங்கால், முன்னாள் அலர்த்தப்பட்டு இரவிற் குவிந்திருந்த மலர்களும், அவற்றி

னிடையே தாமே விரிந்து மலரும். அதுபோல 'பிரளயா கலருக்கு முன்னுணர்த்தும் தான் குருவாய் முன்' எனப் படும் சிவபெருமான், நாற்றோளும் முக்கண்ணும் கறை மிடறும் முதலியன அமைந்த தனது இயற்கை வடிவினையே குருவடிவாகக் காட்டி முன்னே நின்று அருளியபோது, ஆளுடைய பிள்ளையார் அறிவின்கண் ஏனைய ஞானங் களோடு கலைஞானமும் இடையே போந்து இயல்பாக விரிந்து மலர்ந்தது. இக் குறிப்பினை நம்மனோர் உய்த்துணர்ந்து கொள்ளுமாறு வைப்பு முறையால் விளக்குதற் பொருட்டே, கலைஞானம் தொடக்க நிலைக்கு உரியதாகவும், அதனை முதலிற் கூறாமல் ஆசிரியர் சேக்கிழார் இடையிற் கூறியருளி னார். இனி ஆளுடைய பிள்ளையார் இந்த ஞானங்களையெல் லாம் சாதன வழியால் ஒன்றன்பின் ஒன்றாகப் படி முறையே எய்தாமல், ஒருகாலத்து ஓரிடத்திற்றானே ஒருங்கெய்தினர் என்னும் பெரு வியப்பிற்குரிய செய்தியின் பெற்றியுணர்த்து தற்கே, ஆசிரியர் இங்ஙனம் ஞானத் திறங்களை மாற்றிக் கூறி யருளினர் எனினுமாம்.

உணர்வரிய மெய்ஞ்ஞானம்:

4. ஆளுடைய பிள்ளையார் பெற்றுப் பிறங்கிய மெய்ஞ் ஞானம், தேவர் முனிவர்களாலும் இற்றென எண்ணி யுணர் தற்கும் அரிய சிறப்புடையதாகலின், அதனை 'உணர்வரிய மெய்ஞ்ஞானம்' என விதந்து ஓதினார். "அகில தேவருக் கும் முனிவருக்கும் தெரிவரிய பொருள் ஆகும் தாவில் தனிச் சிவஞானம்" என இம் மெய்ஞ்ஞானத்தினை, ஆசிரி யர் சிறந்தெடுத்துக் குறிப்பிட்டிருத்தலும் ஈண்டுக் கருதி யுணரற் பாலது. அனுபூதி ஞானத்திற் சுட்டுணர்வு கெட்டொழிதலின் அதுபற்றி 'உணர்வரிய' என்னும் அடை மொழிபுணர்த் தோதினார் எனலுமாம்.

இனி மெய் என்பது சிவசத்து ஆகிய இறைவனைக் குறிப்பதாகக் கொண்டு, 'உணர்வரிய' என்பதனை இறைவ னுக்கு அடைமொழி யாக்கலும் ஒன்று. "உணர்வரிப் மெய்" என்பது 'பசுஞான பாசஞானங்களான் அறியய

படாத கடவுள்' எனப் பொருள்படும். "ஊனக்கண் பாசம் உணராப் பதி" என்னும் சிவஞான போதமும், "பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரன்" என்னும் சிவஞான சித்தியாரும், "பாசமா ஞானத்தாலும் படர் பசு ஞானத்தாலும் ஈசனை யுணர ஒண்ணாது" என வரும் சிவப்பிரகாசமும் இப் பொருளை வலியுறுத்தும்.

"உணர்ந்தார்க்கு உணர்வரியோன்" என்னும் திருச்சிற்றம்பலக் கோவையார் (௪) செய்யுளில், 'ஒருகால் தன்னை உணர்ந்தார்க்குப் பின் உணர்தற்குக் கருவியாகிய சித்த விருத்தியும் ஒடுங்குதலின் மீட்டு உணர்தற்கு அரியவன்' எனவும், 'தவத்தானும் தியானத்தானும் எல்லாப் பொருள்களையும் உணர்ந்தவர்க்கும் உணர்வரியவன்' எனவும் பேராசிரியர் செய்திருக்கும் விளக்கமும் ஈண்டு அறிந்தின்புறுதற்குரியது.

இங்ஙனம் உயிர்களெல்லாம் எண்ணிறந்த பல பிறவிகளாற் படிமுறையே எய்துதற்குரிய இவ்வகை ஞானங்களையெல்லாம், இடையீடின்றி ஆளுடைய பிள்ளையார் ஒருங்கே பெற்றனராதலின் அந்நிலையில் எனவும்; இவற்றைப் பெறுதற்குரிய எண்ணில் பெருந்தவங்கள் செய்து பிறந்தமையின் தவமுதல்வர் எனவும் ஆசிரியர் சேக்கிழார் பெருமான் அருளிச் செய்தனர்.

ஞானத்தின் வகைகள் :

இத்துணை நுண்பொருள்கள் பல செறிந்த இச் செய்யுளிற் குறிப்பிடப் பெற்ற ஞானம், எத்தனை வகைத்து? எனத் துணிதலிலேயே பேரறிஞர்கள் பலர், ஒருவரோடு ஒருவர் மாறுபட்டு நின்றனர். சபாபதி நாவலர் முதலிய சிலர், ஞானம் பரம் அபரம் என இருவகைப்படும் என்றனர்.

"மருவிவரும் உயர்ஞானம் இரண்டாம். மாறு
மலம் அகல அகலாத மன்னு போதத்
திருவருள் ஒன்று; ஒன்றதனைத் தெளிய ஓதும்
சிவாகமம் என்றுல கறியச் செப்பும் நூலே"

எனவரும் சிவப்பிரகாசச் செய்யுள் (10) அவர்களுக்கு மேற்கோள் ஆயிற்று. சோமசுந்தர நாயகர் முதலிய சிலர்கேட்டல்

சிந்தித்தல் தெளிதல் நிட்டை என ஞானம் நான்கு வகைப் பட்டு நிற்கும் என்றனர்.

"கேட்டலுடன்சிந்தித்தல் தெளிதல் நிட்டை
கிளத்தல்என ஈரிரண்டாம் கிளககின் ஞானம்"

எனவரும் சித்தியார் செய்யுள்(276) இவர்களுக்கு மேற் கோளாகப் பயன்பட்டது.

ஞானம் இருவகைத்து என்போர் 'சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகுசிவஞனம் (ஆகிய) உவமையிலாக் கலைஞானம்' எனவும், 'பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம் (ஆகிய) மெய்ஞ்ஞானம்' எனவும் ஏற்றபெற்றி இயைத்துப் பொருள் கொள்வர்

ஞானம் நால்வகைத்து என்போர், உவமையிலாக் கலை ஞானம் (கேட்டல்), சிவனடியே சிந்திக்கும் ஞானம் (சிந்தித் தல்), பாங்கினில் ஓங்கிய ஞானம் (தெளிதல்), உணர்வரிய மெய்ஞ்ஞானம் (நிட்டை) எனக் கொள்ளுவர். இனிக் கலை ஞானம் (ஆகமம்) சிவனடியே சிந்திக்கும் ஞானம் (அனுமா னம்), ஓங்கிய ஞானம் (அனுபவம்), உணர்வரிய மெய்ஞ் ஞானம் (அனுபவாதீதம்) எனவும் இதனை அவர்கள் விளக் குவர். மேலும் சிவஞான போதத்தில் 8 ஆம் சூத்திரம் கேட்டலையும், 9 ஆம் சூத்திரம் சிந்தித்தலையும், 10 ஆம் சூத் திரம் தெளிதலையும், 11 ஆம் சூத்திரம் நிட்டையினையும் உணர்த்துகின்றன என்பதும் இவர்கள் கருத்து.

"இந்த ஞானங்களுக்கு விஷயம் ஆகும் சிவமாகிய ஞேயப் பொருள் மனனம் ஆகிய இரண்டாவது ஞானத் தில் தானே வெளிப்படலால் அதனை முன் வைத்துக் கூறி னர்; ஞேயமாகிய சிவம் அநந்யமாய்த் தோன்றும் இடமா கிய ஞாதுருவை விளக்கலால் 'பாங்கினில் ஓங்கிய' என்று நிதித்தியாஸனத்தை அதன் பின் வைத்தருளினர்; ஞாதா வாகிய தன்பக்கல் நிகழும் ஞேயமாகிய சிவத்தை ஞானத் தால் அறியக் கூடாமையால், அந்த ஞானபீடம் ஆகிய சிர வணத்தை அதன் பின்னே அமைத்தருளினர்; இவை திரி புடியாக விளங்கலால், திரிபுடி யதீதத்தைக் காட்டுவதெனச்

சமாதியை முடிவாகச் சாதித்தருளினர்" எனச் சோம சுந்தர நாயகர் அவர்கள் தரும் விளக்கமும் ஈண்டு நாம் அறிந்து இன்புறத் தக்க தொன்ருகும்.

## முடிவுரை

இங்ஙனம் ஞானத் திறம் பற்றிய ஆராய்ச்சியின்கண் மாறுபட்டு நின்ற பேரறிஞர்களின் வழக்கீட்டில், மாத்தினது பாரையினின்று கவடுகோடு கொம்புவளார் முதலியன பலவும் ஒன்றேடொன்று தொடர்பு பட்டெழுந்து நிற்றல் போல, இடையிடையே வேறு பல பொருள்களும் இவை புறத்தப்பட்டு விராய் வந்தன. ஆதலின் அவர் தம் வழக்கீடும் முடிவு பேறு இன்றியே விரிந்து சென்றது. எனினும், ஒரு வகையிற் பின்வருமாறு நாம் இது பற்றி முடிவுக்கு வருதல் இழுக்கு ஆகாது.

பிறவிப்பயனை இம்மை மறுமை என இரண்டாயும், இம்மைஉம்மை அம்மை எனமூன்ருயும், அறம் பொருள் இன்பம் வீடு என நான்காயும் குறிப்பிடுகின்ருேம். முத்தியைப் பத முத்தி பரமுத்தி என இரண்டாயும், சாலோகம் சாமீபம் சாரூபம் சாயுச்சியம் என நான்காயும் கூறுகின்ருேம். இறைவனின் தொழில்களை ஆக்கல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என ஐந்தாயும், ஆக்கல் காத்தல் அழித்தல் என மூன்ருயும், பந்தம் வீடு என இரண்டாயும் வழங்குகின்ருேம். அதுபோல, ஞானமும் அவத்தை பற்றிப் பரஞானம் அபர ஞானம் என இரண்டும், கருவியும் விடயமும் பற்றிப் பாச ஞானம் பசுஞானம் பதிஞானம் என மூன்றும், முயற்சி பற்றிக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை என நான்கும் ஆகும் எனக் கொள்ளுதல் பொருந்தும் எனலாம்.

"தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையார்
இகலிலர் எஃகுடையார் தம்முட் குழீஇ
நகலின் இனிதாயிற் காண்பாம் அகல்வானத்து
உம்பர் உறைவார் பதி" —நாலடியார்

# தக்கோலம்

திரு. டாக்டர் மா. இராசமாணிக்கனார் அவர்கள்,
M.A., L.T., M.O.L., Ph.D.

செங்கற்பட்டிலிருந்து அரக்கோணம் செல்லும் புகை வண்டிப் பாதையில் தக்கோலம் என்னும் பெயர் கொண்ட புகைவண்டி நிலையம் இருக்கிறது. அந்நிலையத்திற்குக் கிழக்கே மூன்றுகல் தொலைவில் தக்கோலம் என்ற வரலாற்றுப் புகழ்பெற்ற ஊர் அமைந்துள்ளது. ஊருக்குக் கிழக்கில் சிவன்கோயில் இருக்கின்றது. இச்சிவன் கோவில் திருஞானசம்பந்தரால் பாடப்பெற்ற சிறப்புடையது. சம்பந்தர் காலம் கி. பி. ஏழாம் நூற்றாண்டு. எனவே அவரால் பாடப் பெற்ற இக்கோவில் கி. பி. ஏழாம் நூற்றாண்டுக்கு முற்பட்டது என்பது திண்ணம். கோவிலுக்கு வடக்கே நந்தி ஒன்று இருக்கிறது. அந்நந்தியின் வாயிலிருந்து நீர் எப்பொழுதும் விழுந்து கொண்டிருக்கிறது. இதனால் இவ்வூருக்குத் திருவூறல் என்பது பெயராயிற்று.

**கல்வெட்டுக்கள்:**

திருவூறல் கோவிலில் 54 கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவை சோழப்பேரரசை நிறுவிய ஆதித்த சோழன் மகனான முதற் பராந்தகன் காலம் ( கி. பி. 907–953 )முதல் கி. பி 16 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி ( கி. பி. 1550 ) வரையில் ஆண்ட அரசர்களுடைய காலங்களிற் பொறிக்கப்பட்டவையாகும். எனவே இக்கோயில் சம்பந்தர் காலமான கி. பி. ஏழாம் நூற்றாண்டு முதல் கி. பி. 16–ஆம் நூற்றாண்டு வரையில் சிறப்புற்று இருந்தது என்பது தெளிவாகும். இனி இக்கல்வெட்டுக்களில் காணப்பெறும் அரசர் பெயர்களையும், அவர்தம் ஆட்சிக்காலங்களையும் கீழே காண்க:—

அரசர்கள்

| | |
|---|---|
| முதற் பராந்தக சோழன் | —கி. பி. 907— 953 |
| இராசாதித்தன் | — ,, |
| கன்னரத்தேவன் | |

(இரட்ட அரசனன மூன்றும்
கிருஷ்ணன்) ,,

இராசராசன் I —கி. பி. 985—1014
இராசேந்திரசோழன் I —கி. பி. 1012—1044
இராசேந்திர சோழதேவர் —கி. பி. 1052—1064
வீர இராசேந்திரன் —கி. பி. 1063—1069
குலோத்துங்க சோழதேவர் I —கி. பி. 1070—1122
குலோத்துங்க சோழதேவர் III —கி. பி. 1178—1218
சிற்றரசன் தம்மு சித்தி ,,
சிற்றரசர் திருக்காளத்தி தேவர்
என்ற யாதவராயர் ,,
விஜயகண்ட கோபாலதேவர் —கி. பி. 1246—1279
(மூன்றும் இராசேந்திரன் காலம்)
வீரப்பிரதாப தேவராய
மகாராயர்—கி. பி. 1427
வீரப்பிரதாப சதாசிவதேவ
மகாராயர்—கி. பி. 1543

**கல்வெட்டுச் செய்திகள்:**

திருவூறல் கோவிலுக்கு அரசாங்க உயர் அலுவலரும் பொதுமக்களும் பல அறங்களைச் செய்து வந்தனர். அவற்றுள் குறிக்கத் தக்கவை விளக்கு எரித்தல், நிலமளித்தல், விழாக்கள் செய்யப் பொருள் அளித்தல், பூசைக்காகப் பொருள் உதவுதல் என்பன. பல கோவில்களில் இத்தகைய அறங்கள் பெரும்பாலும் தனிப்பட்டவரால் ஏற்று நடத்தப் பட்டன. ஆயின், திருவூறல் கோவிலுக்குச் செய்யப்பட்ட அறங்களுட் பல கோவிலதிகாரிகளாலும் சிற்றூர், அவையினராலும் ஏற்று நடத்தப்பட்டன என்பதைக் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன.

**விளக்குத்தானம்:**

பொதுவாகக் கோவில் கல்வெட்டுக்களுட்பல, விளக்குகள் எரிக்கப் பணத்தையோ, ஆடுகளையோ, மாடுகளையோ தானம் செய்த விவரங்களைத் தெரிவிப்பது வழக்கம். அவ்

விளக்குகள் சாதாரணவிளக்கு, சந்திவிளக்கு, நந்தாவிளக்கு எனப் பல வகைப்படும். ஆயின் இக்கோவிலில் நந்தா விளக்கு எரிப்பதற்காகவே பொன்னும் ஆடுகளும் வழங்கப் பட்டன. நந்தா விளக்கு என்பது இறைவன் திருமுன்பு எப்பொழுதும் எரிந்துகொண்டிருக்கும் விளக்கு. ஒரு நந்தாவிளக்கு எரிக்க 90 ஆடுகள் கோவிலுக்கு விடப்பட் டன. அதாவது, அந்த ஆடுகளின் வருவாயைக் கொண்டு ஒரு நந்தாவிளக்கு எரிக்கப்பட்டது என்பது பொருள். ஒன் றரை நந்தா விளக்கெரிக்க 135 ஆடுகள் விடப்பட்டன. 'அரைவிளக்கு' என்பது அளவில் சிறியதாக இருத்தல் வேண்டும். ஒரு நந்தாவிளக்கு எரிக்க 15 கழஞ்சு பொன் கொடுக்கப்பட்டது. அதாவது, அதன் வட்டியைக் கொண்டு ஒரு நந்தாவிளக்கு எரிக்கவேண்டும் என்பது திட் டம். மற்றொரு நந்தா விளக்கு எரிக்க முப்பது கழஞ்சு பொன்னின் வட்டி பயன்படுத்தப்பட்டது. இவற்றை நோக்க, முன்னது அளவில் சிறியதாகவும், பின்னது அள வில் பெரியதாகவும் இருத்தல் வேண்டும் என்பது புலனாகும்.

பிற தானங்கள்:

மாசிமக விழாவிற்கும், திருவூறல் நாயனாரை ஊர்வல மாகக் கொண்டு வருவதற்கும் ஓர் உயர் அலுவலன் நில தானம் செய்தான். பூசை நடத்தவும் விழாக்கள் நடத்தவும் ஒரு சிற்றரசன் நிலதானம் செய்தான். பெரிய குளத்தில் தெப்பவிழா நடத்த ஓர் அம்மை பொன்தானம் செய்தாள். மற்றொருவர் பூசை முதலியன நடைபெற 455 கழஞ்சு பொன்தானம் செய்தார். 'பன்டரெட்டிகள்' நூறு பொன் னுக்குக் கோவில் நிலத்தை வாங்கிக் கோபுரம் கட்டினர். கோவிலதிகாரிகள் அப்பொன்னின் வட்டியைக் கொண்டு காலைப்பூசையில் தயிர்ச்சோறு படைக்க ஒப்புக் கொண்ட னர்.

தானம் செய்தவர்கள்:

நிலம், பொன், விளக்கு முதலியவற்றைத் தானமாகச் செய்தவர் பலராவர். சிற்றரசன் திருக்காளத்தி தேவன், பராந்தகதேவர் மகளான வீரமாதேவி, தக்கோலத்துப்பெண்

மணி ஒருத்தி, பாண்டி நாட்டு வையக் கரைத் தேனூர் வாசி ஒருவன், சோணாட்டுப் பாம்புணிக் கூற்றத்துத் தேவன் குடித் தலைவனான வீரசோழ விழுப்பேரரையன், சோணாட்டு வேலூர்க் கூற்றத்துப் புலியூரான், மதுராந்தகப் பல்லவரை யர் சேவகன் ஒருவன், மணவிற் கோட்டத்துப் பாசலி நாட்டுப்பாசலி என்ற ஊரின் தலைவன், இராசேந்திர சோ ழப் பிரம்மாதிராயரது பணிமகள்; திருவூறல் நங்கை என் பவளுடைய ஒரு மகளான வீரம்மை, மற்றொரு மகளான கோவிந்தம்மை, பல்லவர் மரபைச் சார்ந்த மதுசூதன தே வன், திருவூறல் வணிகர்குழு, திருவூறல் நெசவாளர் குழு, பன்டரெட்டிகள் தானங்களை ஏற்று நடத்த ஒப்புக் கொண்டவர்.

இராச மார்த்தாண்ட சதுர்வேத மங்கலச் சபையார், புரிசை ஊரார், தாமல் கோட்டத்துச் சம்புழலை என்னும் ஊரார், புரிசைநாட்டு ஊரடகம் என்னும் ஊரார், பருந்தூர்ச் சபையார், திருவூறல் புரத்தைச் சேர்ந்த அபராசிதச் சதுர் வேதி மங்கலச்சபையார், தக்கோலத்தைச் சார்ந்த திருவூறல் புரத்திலுள்ள சீறூர் மக்கள், சங்கரன்பாடி ஊரார், திருவூ றல் திருவுண்ணாழிகைச் சபையார்.

**கோவிலாட்சி:**

திருவூறல் மகாதேவர் கோவில் ஆட்சியை ஒரு குழுவி னர் இருந்து கவனித்து வந்தனர். அவர்களல்லாமல் திரு வுண்ணாழிகைச் சபையார் என்று மற்றொரு குழுவினரும் இருந்தனர். திருவுண்ணாழிகைச் சபையார் என்பவர் கோ வில் கருவறைத் தொடர்பான பூசை, விழா முதலியவற் றைக் கவனிக்கும் குழுவினர் என்று கருதலாம். கோவில் நிலங்கள், கிராமங்கள் முதலியவற்றைக் கவனிப்பவர் கோவி லாட்சிக் குழுவினர் எனலாம். திருவூறல் கோவிலில் பண் டாரம் (பொக்கிஷம்) இருந்தது என்று ஒரு கல்வெட்டுக் கூறுகிறது.

**கடவுளர் பெயர்கள்:**

தக்கோல விடங்கர், திருவூறல் மகாதேவர், திருவூறல் ஆழ்வார், திருவூறல் கற்றளி மகாதேவர், திருவூறல் உடையு

நாயனுர் என்பன இறைவன் பெயர்களாகும். இறைவியின் பெயர் மலையாமகள் அம்மை. இது 'மலையான் மகள் அம்மை' என்பது. மலையான் மகள் என்பது மலையரசன் மகளான பார்வதிக்குப் பெயராகும்.

**அளவைகள்:**

அக்காலத்தில் பொன் நாணயங்களைச் சோதிக்கும் கல் 'தரும கட்டளைக்கல்' எனவும், 'துளைநிறை பொன்' எனவும் பெயர் பெற்றது. அக்காலப் 'படி' என்னும் முகத்தலளவை 'இராஜகேசரி நாழி' எனவும், 'அருள் மொழித் தேவன் நாழி' எனவும் பெயர் பெற்றது. இராஜகேசரி என்பதும் அருள்மொழித்தேவன் என்பதும் முதல் இராசராச சோழன் பெயர்களாகும். இரண்டு குன்றி மணி = 1 மஞ்சாடி. இருபது மஞ்சாடி = 1 கழஞ்சு. இவை நிறுத்தலளவைப் பெயர்கள். அதாவது, நாற்பது குன்றி மணி எடை ஒரு 'கழஞ்சு' பொன்னாகும்.

**நாணயங்கள்:**

அக்காலத்தில் பழங்காசுகள், கண்டகோபாலன் மாடை, புஜபலமாடை என்பன வழக்கில் இருந்தன. பொதுவாக வழங்கும் காசு, பொன் என்பவற்றுடன் கண்டகோபாலன் மாடை, புஜபலமாடை போன்ற பொற்காசுகளும் 12, 13–ஆம் நூற்றாண்டுகளில் தொண்டை நாட்டில் வழங்கின. இவற்றை வழங்கிய அரசர் யார் என்பதை உறுதியாகக் கூற இயலாது. ஆனல் இவை மூன்றும் குலோத்துங்கனது ஆட்சியில் வழக்கிலிருந்தன என்று மட்டும் கூறுதல் இயலும். கண்ட கோபாலன் மாடை, விஜய கண்ட கோபாலன் ஆட்சிக் காலத்தில் வெளியிட்டவை. அவன் கி. பி. 1250 இல் ஆட்சி தொடங்கியவன். 'ஸ்ரீ புஜவ' என்னும் பெயர் கொண்ட நாணயங்கள் நெல்லூர் மாவட்டத்துக் கோடூரில் கிடைத்துள்ளன, இவை யாரைக் குறிப்பன என்பது திட்டயாகக் கூறக் கூடவில்லை.

**ஊர்ப்பெயர்கள்:**

தக்கோலம் என்ற வல்லவபுரம், மேல்மலை ஆற்றூர் நாட்டு இராசமார்த்தாண்ட சதுர்வேதி மங்கலம் என்ற

உரகையூர் (இது தேவதான கிராமம்), மணவில் கோட்டத்துப் புரிசை நாட்டுப் புரிசை, மணவில் கோட்டத்துப் பாசலி நாட்டுப் பாசலி, மணவில் கோட்டத்துப் புரிசை நாட்டுத் திருவூறல் புரத்தைச் சேர்ந்த அபராசிதச் சதுர்வேதி மங்கலம் (அபராசிதன்—பல்லவ மன்னன் பெயர்), மணவில் கோட்டத்துப் பன்மா நாட்டுப் புன்னைவயல், பருந்தூர் (தேவதானகிராமம்).

தக்கோலம் என்னும் ஊர் க்ஷத்திரிய சிகாமணிபுரம், இரட்டபாடி கொண்ட சோழபுரம், குலோத்துங்க சோழபுரம், வடமுடிகொண்ட சோழபுரம் எனப்பல பெயர்களைப் பெற்றிருந்தது. அது ஒரு தனியூராகவும் (City) காட்சியளித்தது.

வரலாற்றுச் சிறப்பு:

முதற் பராந்தக சோழன் பேரரசன். அவன் தென்னாடு முழுவதையும் வென்றான். அவன் காலத்தில் இராட்டிரகூடர் பம்பாய் மாநிலத்தை ஆண்டு வந்தனர். மூன்றாம் கிருஷ்ணன் என்ற கன்னரதேவன் சோழப் பெருநாட்டின் மீது படையெடுத்தான். அவனுக்குத் துணையாக அவன் மைத்துனனான இரண்டாம் பூதுகன் என்ற கங்க அரசனும் வந்தான்.

இரட்டரது படையெடுப்பை எதிர்பார்த்துப் பராந்தகன் மகனான இராசாதித்தன் திருநாவலூர்ப் பகுதியில் பெரும் படையுடன் தங்கியிருந்தான். அவனுக்கும் கன்னரதேவனுக்கும் போர் மூண்டது. இராசாதித்தன் முதல் போரில் கன்னரதேவனை முறியடித்தான். பின்னர் இரு திறத்தாருக்கும் தக்கோலத்தில் கடுமபோர் நடைபெற்றது. போர்க்களத்தில் யானைமீதிருந்த இராசாதித்தன் கங்க அரசனால் கொல்லப்பட்டான். இதனால் சோழர் சேனை சிதறுண்டது. கன்னரதேவன் பெற்ற இந்த வெற்றியால் பராந்தகன் சோழப் பெருநாட்டில் பெற்றிருந்த பாணப்பாடி, தொண்டை நாடு, வைதும்ப நாடு என்றவற்றை இழந்தான். தக்கோலம் என்ற இடத்தில் நடந்த கடும் போரே இத்தகைய வரலாற்று நிகழ்ச்சிகளுக்கு அடிப்படையாகும். இவ்வாறு தக்கோலம் சமயச் சிறப்புடன் வரலாற்றுச் சிறப்பும் உடையவூராகும்.

# பிரிவாற்ருமை

## யாழ்ப்பாணத்துச் சைவப் பெரியார்கள் இருவர் மறைவு

(கோவைகிழார் திரு. சி. எம். ஆர்)

அநேக ஆண்டுகளாகச் சைவத்திற்கும், செந்தமிழுக்கும் தொண்டு செய்துவந்த யாழ்ப்பாணத்துப் பெரியார்கள் இருவர் சிவனடி சேர்ந்தார்கள் என்று மிகத் துயரத்துடன் வெளியிடுகிருேம். திரு. கலைப்புலவர் நவரத்தினம் அவர்கள் தம் வாழ்நாள் முழுதும் சைவக்கலைகள், சைவச்சிற்பம் முதலிய நற்கலைகளுக்கே சேவை செய்த புனிதவான். அவரது வீட்டரசியார் திருமதி. மாகேசுவரி அம்மையார் தமிழ் இசையில் வல்லவர். 'வீணை' என்ற ஒரு கலைநூலை வெளியிட்டுள்ளார். 'தென்ஞட்டுச் சிற்பங்கள்' என்ற ஒரு தலைசிறந்த நூலை அழகிய ஓவியங்களுடன் முதன் முதலில் வெளியிட்ட பெருமை கலைப்புலவருக்கே உரித்தாயது. மற்றும் ஈழநாட்டுப் புலவர் பெருமக்களுடைய விழா மலர்களை வெளியிட்டுள்ளார். அன்ஞர் திடீரென மறைந்ததற்குத் துயரப்படுகிருேம். அன்ஞர் ஆன்மா இறைவன் திருவடியில் சாந்தியுறுவதாக! திருமதி. மாகேசுவரி அம்மையாருக்கு நம் அனுதாபங்களைத் தெரிவிக்கிருேம்,

இனி, மற்ருெரு சைவப் பெரியார் திரு. அ. அருள் அம்பலம் ஆவார். யாழ்ப்பாணத்தில் நீராவியடியில் வழக்கறிஞர் தொழில் பூண்ட அன்ஞர் ஈழநாட்டில் கூட்டுறவு இயக்கத்தில் தலைசிறந்த சேவையும், 'ஐக்கியதீபம்' என்றதாளுக்கு ஆசிரியராகவும் இருந்தவர். ஈழநாட்டில் நடந்த எல்லாச் சைவ மகாநாடுகளிலும் பங்குஎடுத்துக்கொண்டவர். அன்ஞர் நடுவயதிலேயே இறைவனடி சேர்ந்தார் என்பதைத் துயரத்துடன் வெளியிடுகிருேம். அன்ஞர் புதல்வி திருமதி. திலகவதி யோகநாதன் அவர்களுக்கு எம் அனுதாபத்தைத் தெரிவிக்கிருேம்,

மேலும் இருபெரு மக்களும் யாழ்ப்பாணம், கொழும்பு என்ற இரு நகரங்களில் நடந்த சைவ மகாநாடுகள் எல்லாவற்றிலும் மிகுந்த பங்கெடுத்துக் கொண்டார்கள். அன்ஞர்களுக்குத் தமிழ்நாடும், சைவ உலகமும் மிகவும் கடமைப்பட்டுள்ளது.

# ஆண்டறிக்கை

சைவ சித்தாந்த மகா சமாஜம் முதன் முதலில் திருப் பாதிரிப்புலியூரில் தவத்திரு ஞானியாரடிகள் திருமடத்தில் விசுவாவசு ஆண்டு ஆனித் திங்கள் 24-ஆம் நாள் (7—7—1905) வெள்ளிக் கிழமை தொடக்கப்பெற்று, இன்றுவரை 'இறைவன் திருவருளால் மேன்மை கொள் சைவநீதி உலகெலாம் விளங்க வேண்டுமென்ற பெருநோக் கத்துடன் சமயத் தொண்டாற்றி வருகின்றது. எஸ். 6/1915—16 என்ற எண்ணில் இச்சமாஜம் 11—12—1915-ல் சபைகளின் பதிவுச் சட்டப்படி பதிவு செய்யப்பட்டது.

## இவ்வாண்டின் சமாஜப் பணியாளர்கள்

தலைவர் : திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார், எம். ஏ., அவர்கள்.

துணைத்தலைவர்கள் : (1) திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி.எ., எல்.டி.. அவர்கள்; (2) திரு. நல். முருகேச முதலியார், பி.எ., அவர்கள்.

செயலர் : திரு. ஜி. கலியாணம், எம். ஏ. அவர்கள்.

உதவி செயலர் : வித்துவான் திரு. அம்பை-சங்கரனர் அவர்கள்.

பொருட்காப்பாளர் : திரு. மா. ப. தியாகராஜன், பி. ஏ. அவர்கள்.

சென்ற ஆண்டு 55வது ஆண்டு விழாவை 30—12—60 முதல் 1—1—61 வரை இலங்கைத் திருக்கேதீச்சுரத்தில் திருக்கேதீச்சுர ஆலயத் திருப்பணிச் சபையினர் சிறப்புற நடத்தித் தந்தனர். இவ்வாண்டு, 56-ஆவது ஆண்டு விழா பழனிச் சைவ சித்தாந்த சபையினரால் நடத்தித் தரப்படுகிறது.

## சமாஜத்தின் நோக்கங்கள்

உய்யும்வகை யாதென வேட்கைகொண்டு வினவும் மக்கள் உலகெங்கும் பரவி நிற்கின்றனர். சைவ சமயத்தில் அவ்வேட்கையைத் தணிக்கவல்ல தக்க விடையும் வழியும் பொதிந்து கிடப்பதை அவர்களுக்கு எடுத்துக் காட்ட முற்படுவதே இச் சமாஜத்தின் முக்கிய நோக்கமாகும். அக் குறிக்கோள் கொண்டு, சைவ சமய நூல்களை அடக்க விலைக்குப் பதிப்பித்து வழங்கல், "சித்தாந்தம்" என்னும்

உயரிய பத்திரிக்கையை மாதந்தோறும் அரிய கட்டுரைகளுடன் வெளியிடல், சமயச் சொற்பொழிவுகளை மாதந்தோறும் ஆங்காங்கு நிகழ்த்துதல் சைவ சமய பரமாசாரியர்கள், நாயன்மார்கள், சந்தான குரவர்கள் ஆகியவர்களுடைய திருநட்சத்திரங்களைக் கொண்டாடுதல், சிவாலயங்களில் வார வழிபாடு நடத்துதல், சைவப் புலவர் தேர்வு இளஞ் சைவப்புலவர் தேர்வு ஆங்காங்கு நடாத்தி மாணவர்கள் சைவ சமய நூல்களைக் கற்க ஊக்குவித்தல், துண்டுப் பிரசுரங்கள் மூலம் சமய நெறி பரப்பல், நாயன்மார்கள் சரித்திரங்கள் வெளியிடுதல், தக்கவர்கள் ஆதரவு கொண்டு தேவார வகுப்புகளைக் கூடிய இடங்களில் ஏற்படுத்தி மாணவர்களுக்குப் பன்னிரு திருமுறைகளையும் கற்பித்தல் பண்ணிசையுடன் தேவாரப்பாடல்களைப் பாடக் கற்பித்தல், முதலியன செய்து வருகின்றது.

இவ் வாண்டு நிகழ்த்தப்பட்ட இத்தகைய பணிகளின் விவரங்களை ஈண்டு நோக்குவாம்.

## வெளியீடுகள்

"திருவெம்பாவை – திருப்பள்ளியெழுச்சி" (உரையுடன்), "சைவ சமயச் சொற்பொழிவுகள்" "ஞானியாரடிகள் நினைவு மலர்" "பெரியபுராணம்" "முருகன் முந்நூல்" "சமாஜப் பொன்விழா மலர்" சிவஞான போதம் (எளிய உரை), "குகார்ச்சனைத் திருமந்திரம்" முதலிய சமாஜ வெளியீடுகள் ஆயிரக்கணக்கான பிரதிகள் விலையாகாமல் சமாஜ நிதியில் பெரும்பகுதி முடங்கிக் கிடக்கிறது அப்புத்தகங்களை வாங்கிப் பயனடைவோர் சமாஜத்திற்குப் பேருதவி புரிந்தோராவர். சமாஜப் பொருளாளர் திரு. மா. ப. தியாகராஜ முதலியார் அவர்கள் தம் சொந்தச் செலவில் "கந்தரனுபூதி"யை உரையுடனும் சக்கரங்களுடனும் சமாஜ மூலமாக வெளியிட்டுள்ளார்கள்.

இவையன்றி, சைவசமயப் பாட புத்தகங்கள் பள்ளிகளில் அமைக்கத்தக்க தகுதியான முறையில் அச்சிட்டு வெளியிடப் பொருளுதவி செய்வதாக அம்பாசமுத்திரம் திரு. வி. எஸ். ஆறுமுகம் பிள்ளையவர்கள் முன்வந்தார்கள். அதற்கிணங்கத் திரு ரா. சண்முகசுந்தரம் செட்டியாரவர்கள் "அறப் பயிற்சி மாலை" என்னும் முதல் புத்தகத்தை எழுதி உதவினர்கள். சமாஜம் அமைத்த ஒரு குழுவினர் அதைப் பரிசீலனை செய்ய அது பின்னர் அச்சிடப்பெற்றது, அநேக பள்ளிகளில் அந்நூலை வாங்கி ஆதரவு காட்டி வரு

கின்றனர். மாணவர்கட்குப் பயன்படும் முறையில் இவ் வெளியீடு இருத்தலால் பள்ளிகளில் வாங்கினுல் இன்னும் அடுத்த நிலைக்கான நூலை வெளியிடுவதற்கு ஊக்கம் தருவ தாக இருக்கும்.

## சித்தாந்தம்

இச்சிறந்த மாத சஞ்சிகை சமாஜ அங்கத்தினர்களுக்கு இலவசமாக வழங்கப்படுகிறது. போதிய அங்கத்தினர் களுடைய தொகைப் பெருக்கம் இல்லாக் குறையால் இப் பத்திரிகையின் அளவு குன்றிச் சில கட்டுரைகளே வெளி யிடப்படுகின்றன. 700 பிரதிகளே மாதா மாதம் அச்சிடப் பட்டு வருகின்றன. இச்சஞ்சிகையை அதிக பக்கங்க ளுடன் அரிய இனிய பல கட்டுரைகளுடன் வெளியிட 1000 பிரதிகளாகிலும் அச்சிடக்கூடிய நிலையில் அங்கத் தினர்கள் தொகை அதிகப்பட ஒவ்வொரு அங்கத்தினரும் முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டப்படுகிறது. 630 அங்கத் தினர்களே தற்போதுள்ளார்கள்.

## கூட்டங்கள்

இவ்வாண்டு, சமாஜச் செயற்குழுக் கூட்டம் பத்தும் பொதுக்கூட்டங்கள் ஐந்தும் நடைபெற்றன.

## சிறப்புக்கூட்டம்

அப்பர் திருநாள் : திருமயிலைக் கபாலீச்சரத்தில் நடை பெற்றது.

22—5—61; 23—5—61 : இராயப்பேட்டை ஸ்ரீ பால சுப்பிரமணிய பக்தஜன சபையில் திரு புலவர் N. R. முருக வேள், M. A, M. O. L. அவர்கள் "திருவுந்தியார்," "திருக் களிற்றுப்படியார்" என்னும் பொருள்கள்பற்றிச் சொற்பொழி வாற்றினுர்கள்.

24—2—61, 25—5—61 : மேற்படி சபையில் திரு. ரா. சண்முக சுந்தரம் செட்டியார் அவர்கள், "சிவஞான போதம்" "சிவஞான சித்தியார்" என்னும் பொருள் கள் பற்றிச் சொற்பொழிவுகள் செய்தார்கள்.

18—6—61 : மாணிக்கவாசகர் திருநாள் : இராயப் பேட்டை ஸ்ரீ சுந்தரேசுவரர் கோயிலில் திரு. G. கலியாணம் பிள்ளை M. A. அவர்கள் தலைமையில், திருவாளர்கள் T. செங் கல்வராயப்பிள்ளை, M. A., L.T. அவர்களும், வித்துவான் அம்பை-சங்கரனுர் அவர்களும் முறையே "திருவாசகம்"

"மாணிக்கவாசகர்" என்னும் பொருள்கள் பற்றிச் சொற்பொழிவுகள் ஆற்றினார்கள்.

21—7—61 : சுந்தரர் திருநாள்: மேற்படி கோவிலில் திரு. நல். முருகேச முதலியார், B. A அவர்கள் தலைமையில், திருவாளர்கள் புலவர் N. R. முருகவேள், M. A., M. O. L., G. கலியாணம், M. A., இவர்கள் முறையே, "சுந்தரர் செந்தமிழ்", "வன்றொண்டர் வாழ்க்கை" என்பவை பற்றிச் சொற்பொழிவுகள் செய்தார்கள்.

திருவான்மியூர் ஸ்ரீ மருந்தீசர் கோயிலில் நாயன்மார்களின் திருநட்சத்திர நாட்கள் எல்லாவற்றிலும் அவர்களுடைய புராணங்களைச் சொற்பொழிவுகளாகத் திரு. ஆர். விசுவநாதய்யர், M. A., அவர்கள் சமாஜ ஆதரவில் 28—1—61 முதல் தொடங்கி நடத்தி வருகின்றார்கள்.

திருமயிலைச் சமயப் பிரசார சபையினர் நடத்தும் சமயச் சொற்பொழிவுக் கூட்டங்களிலும், திங்கட்கிழமை தோறும் திருமயிலைக் கபாலீச்சரத்தில் நடைபெறும் வார வழிபாட்டுக் கூட்டங்களிலும் சமாஜம் கலந்து கொள்கிறது. தருமபுர ஆதீனப் பிரசார நிலையத்தாரும், புரசைத் திருநெறிக் கழகத்தாரும் நடத்திவரும் மாத வழிபாட்டுக் கூட்டங்களிலும் சமாஜம் பங்கெடுத்துக் கொள்கிறது. அந்த இரண்டு கழகத்தார்களும் நடு நாட்டுத் தலங்கள், தொண்டை நாட்டுத் தலங்கள் இவற்றில் நடத்திய வழிபாட்டுக் கூட்டங்களில் சமாஜ உறுப்பினர் பலர் கலந்து கொண்டு சொற்பொழிவுகள் ஆற்றினார்கள்.

திருப்போரூர் முருகன் செந்தமிழ்க் கழகத்துடன் சமாஜம் தொடர்பு கொண்டு பணியாற்றி வருகிறது. இக் கழகத்தின் செயலர் வித்துவான் திரு. அம்பை-சங்கரனார் ஆவர். 25—10—61ல் திருப்போரூர் முருகன் செந்தமிழ்க் கழகத்தின் மூன்றாவது ஆண்டுவிழா, சென்னை அறநிலையத் துறைத் துணை ஆணையர் திரு. டி. இராமலிங்கரெட்டியார் எம். ஏ. பி. எல், அவர்கள் தலைமையில் நடைபெற்றது. சமாஜச் செயலர் திரு G. கலியாணம், எம். ஏ. அவர்கள் "அடியார் திருக்கூட்டம்" என்னும் பொருள் பற்றிப் பேசினார்கள். ஒவ்வொரு கிருத்திகையிலும் இக்கழகத்தில் சமயச் சொற்பொழிவுகள் நிகழ்கின்றன.

## சமாஜக் கட்டிடம்

சமாஜத் தலைவர் திரு. அ. சோமசுந்தரம் செட்டியார், எம். ஏ., அன்புடன் அளித்த நன்கொடை ரூ. 20,000

கொண்டு, சமாஜத்திற்காகச் சென்னை அந்திக்கடைத் தெரு வில் (Evening Bazaar) மாதம் ரூ 125 வாடகை வரக்கூடிய மூன்று கடைகள் விலைக்கு வாங்கப் பெற்றுப் பத்திரமும் ஆவணக்களரியில் (Sub-Registrar Office) பதிவு செய் யப்பெற்றுவிட்டது. அந்தச் சொத்தைப் பாதுகாத்துச் சமாஜத்துக்கு உதவி செய்வதற்காக ஒரு நம்பிக்கைக் குழு (Trust Board) அமைக்கப்பெற்று, நம்பிக்கை ஆவணமும் (Trust Deed )பதிவு செய்யப்பெறும் நிலையில் இருக்கிறது. கூடிய விரைவில் அது முடிவாகும்.

## மாநாடுகளும் ஆண்டு விழாவும்

சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் 55-ஆம் ஆண்டு நிறைவு விழா இலங்கையிலுள்ள திருக்கேதீசரத்தில் 30, 31—12—60, 1—1—61 ஆகிய மூன்று நாட்களில் நடைபெற்றன. அவ்விழாவைச் சிறப்புற நடத்தித்தந்த, திரு சர். கந்தையா வைத்தியநாதன் அவர்களைத் தலைமையாகக் கொண்ட திருக்கேதீச்சர ஆலயத் திருப்பணிச் சபையாருக் குச் சமாஜம் நன்றி தெரிவித்துக் கொள்கிறது.

அவ்விழாவைப் பற்றிய முழு விவரங்களும் 'சித்தாந்தம்', மலர் 34, இதழ் 1-ல் வெளியிடப் பெற்றுள்ளன. அவ் விழாவைத் துவக்கிவைத்த இலங்கை முன்னாள் அமைச்சர் திரு. சு. நடேச பிள்ளை, பி. ஏ., பி. எல். அவர்களுக்கும், 'திரு வெம்பாவை திருப்பள்ளி யெழுச்சி' என்ற உரையுடன் கூடிய நூல் வெளியீடு செய்த திரு. நல். முருகேச முதலி யார், பி. ஏ. அவர்கட்கும், திருக்கே தீச்சர மாநாடு மலர் ஆங்கிலம் தமிழ் நூல் வெளியீடு செய்த திரு, க. அரங்கசாமி முதலியார்: பி. ஏ , அ!வர்கட்கும், கொடியேற்றிவைத்த திரு. அ. சோமசுந்தரம் செட்டியார், எம். ஏ., அவர்கட்கும், சைவர் மாநாட்டுத் தலைவர் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி. ஏ., எல். டி., அவர்களுக்கும், சைவ மங்கையர் மாநாட்டு வரவேற்பாளர்—திருமதி மகேசுவரி ஸ்ரீ காந்தா அவர்கட்கும் சைவ மங்கையர்மாநாட்டுத் திறப்பாளர்-திருமதி பண்டிதை பாலாம்பிகை தனபாலசிங்கம் அவர்களுக்கும், சைவ மங்கை யர் மாநாட்டுத் தலைவியர் திருமதி க. ர. ஆதிலட்சுமி அம்மை யார் அவர்களுக்கும், சைவ இளைஞர் மாநாடு வரவேற்பாளர் -திரு. சு. பரநிருப சிங்கம் BSc., Did-in-Ed. அவர்கட்கும் சைவ இளைஞர் மாநாட்டுத் திறப்பாளர்- திரு. கோ. ஆழ்வார் பிள்ளை, சி. சி. எஸ். அவர்களுக்காக அவர் திறப்புரையை வாசித்த திரு. அ. கந்தையா அவர்கட்கும், இளைஞர்

மாநாட்டுத் தலைவர் திரு. அம்பை சங்கனார் அவர்கட்கும் மூன்று நாட்களிலும் சொற்பொழிவுகள் நிகழ்த்திய பேரறிஞர்களுக்கும் சமாஜம் நன்றி செலுத்துகிறது. ஆண்டுவிழா நிகழ்ச்சிகளைப் படமெடுத்த இலங்கை அரசாங்கச் செய்தித் துறையினருக்கும், சொற்பொழிவுகளை நாடாப் பதிவு செய்து விளம்பரப்படுத்திய அகில இலங்கை வானொலி நிலையத்தார்க்கும் சமாஜம் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது.

## சமய அறிவு வளர்ச்சித் தேர்வுகள்

சைவப் புலவர் தேர்வு, இளஞ் சைவப்புலவர் தேர்வு ஆகிய இரு தேர்வுகள் ஆண்டுதோறும் சமாஜத்தில் நடத்தப்பட்டு வருகின்றன. இதுவரை இத் தேர்வுகளில் வெற்றி பெறுவோர்க்குப் பட்டமளிப்பு மட்டும் வழங்கப் பெற்று வந்தது. 1959 ஆம் ஆண்டு சைவப்புலவர் தேர்வுக்கு மூலதனமாக ரூ 1000 ஒரு அன்பரால் (பெயர் குறிக்கக் கூடாதெனப் பொருள் வழங்கியோர் கேட்டுக்கொண்டுள்ளார்.) வழங்கப்பட்டுள்ளது. அப்பெரியாருக்குச் சமாஜம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது. அம் மூலதனம் கொண்டு வரும் வட்டியைச் சைவப் புலவர் தேர்வில் முதன்மையாக வெற்றி பெறுவோர்க்குப் பரிசு வழங்கவேண்டுமென்று தீர்மானித்துள்ளோம். இளஞ் சைவப் புலவர் தேர்வில் வெற்றி பெறுவோர்க்குப் பரிசுவழங்க மூலதனத்துக்காக நன்கொடை ரூ. 50 (ஐம்பது) கொடுத்துள்ள திருவாரூர் திரு. இராஜகோபால் பிள்ளை அவர்கட்கும், சமாஜம் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறது.

இவ்வாண்டு தேர்வில் வெற்றி பெற்றவர்கள். இளஞ்சைவப் புலவர்: பி. என். பாலசுப்பிரமணியன் (இரண்டாம் வகுப்பு); க. நா சிவசுப்பிரமணியப் பிள்ளை (மூன்றும் வகுப்பு). சைவப் புலவர் : வ. கந்தசாமி (இரண்டாம் வகுப்பு) க. கணபதிப் பிள்ளை (இரண்டாம் வகுப்பு;) ந. இராமமூர்த்தி (மூன்றும் வகுப்பு).

தேர்வு, யாழ்ப்பாணம், நாகர்கோவில், திருவதிகை, சென்னை முதலிய இடங்களில் 19—11—61ல் நடைபெற்றது. வினாத் தாள்கள் குறித்துக் கொடுத்தும், விடைத்தாள்கள் மதிப்பிட்டும், தேர்வு நடத்தி மேற்பார்வை செய்தும் உதவிய அன்பர்களுக்குச் சமாஜம் நன்றி செலுத்துகிறது. இலங்கையில் அகில இலங்கைச் சைவப் புலவர் பட்டதாரிகள் சங்கம் கீரிமலையில் சைவப் புலவர் தேர்வுப் பள்ளி

யொன்று தொடங்கிச் சமாஜச் சைவப் புலவர் தேர்வுக்குப் பயிற்சி கொடுக்க முன்வந்திருப்பது மகிழ்ச்சிக்குரியது.

## தேவார இசை வகுப்புக்கள்

சமாஜத் தலைவர் திரு. அ. சோமசுந்தரம் செட்டியார், எம். ஏ. அவர்கள் முயற்சியால் தேவார வகுப்புக்கள் ஆங்காங்கு நடத்தப்பட்டு வருகின்றன. அதற்குச் சமாஜக் கட்டிட வருவாயினின்றும் பொருள் வழங்கப்படுகிறது.

## பொருள்நிலை

56-வது ஆண்டு (1-12-60 முதல் 30-11-61) வரை வரவு செலவுக் கணக்கிலிருந்து எடுக்கப்பட்ட தொகுப்பேடு இத்துடன் இணைக்கப்பட்டிருக்கிறது. ஆண்டின் இறுதியில் இந்தியன் பாங்கில் இருப்பு ரு. 545-13; பொருளாளர் கை யிருப்பு ரூ-228-45 கைவசமுள்ள புத்தகங்களின் விலை பெறு மானம் ரூ. 5309–44 பொருள் நிலை மிகவும் வருந்ததக்கதாக இருப்பதை அன்பர்கள் கவனித்துக் குறைவற ஆதரவு தர வேண்டுமாறு பெரிதும் மன்றுடி வேண்டுகிறேம்

## விண்ணப்பம்

சமாஜத்திற்கெனக் கட்டிடம் 3 கடைகளாகத் திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார் எம் ஏ. அவர்கள் கொடுத்த ரூ. 20,000 பொருள் கொண்டு வாங்கப்பட்ட தெனினும், அதைப் பயன்படுத்திக் கொள்ளும் நிலையில் கட்டிடம் மாற்றி அமைக்கப்படப் பணம் தேவையாயுள்ளபடியால், தலைவரவர் களைப் போன்று பெருமக்கள் பொருளுதவி செய்ய முன் வர வேண்டுகிறேம். திரு. மணலி இராமகிருஷ்ண முதலியார். பி, ஏ. அவர்கள் கட்டிட நிதிக்கென வழங்குவதாக அன்பு டன் தெரிவித்த ரூ 6000-ல் வரவுவந்தது ரூ. 4000 போக இன்னும் ரூ 2000 எதிர்பார்க்கப்படுகிறது. இத்தொகை பன்மடங்கு பெருகினலல்லது, சமாஜக் கட்டிடம் நல்ல இடத்திலமைந்து பயனளிக்கும் வகையில் சிறப்புறப் பணிசெய்ய இயலாது. பெருமக்களின் நன்கொடைகள் எதிர்பார்க்கப்படுகின்றன.

## நன்றி

இம் மகா சமாஜத்தைத் தோற்றுவிக்கக் காரணமாயிருந்த மறைமலையடிகள் என்று புகழ்பெற்ற சுவாமி வேதாசலம் அவர்களுக்கும், சித்தாந்தப் பேரறிஞர் J. M. நல்லசாமிப் பிள்ளை அவர்களுக்கும், சொல்வன்மை மிக்க ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகள் அவர்களுக்கும், கல்யாணசுந்தர யதீந்திரர் முதலியவர்களுக்கும் சமாஜம் வணக்கம் செலுத்தக் கடமைப் பட்டுள்ளது. அப்பெரியார்களின் ஒருமித்த நோக்கமும், அன்புகெழுமிய ஆர்வமும், தூய்மை மிக்க எண்ணங்களுமே சமாஜத்தை இதுகாறும் பற்பல இடர்ப்பாடுகளினும் நிலை நிறுத்தித் தொண்டாற்றி வரச் செய்துள்ளன.

"சித்தாந்தம்" பத்திரிகைக்குக் கட்டுரை எழுதியனுப்பிய அன்பர்களும், சமாஜக் கூட்டங்களை அடிக்கடி நடத்த இடந்தந்துதவும் இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையினர்க்கும் சமாஜம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது. சிறப்புக் கூட்டங்களை நடத்துவதற்கு இடமளிக்கும் திருமயிலைக் கபாலீசரம், இராயப்பேட்டை ஸ்ரீ சுந்தரேசர் கோயில், திருவான்மியூர் மருந்தீசர்கோயில் தேவஸ்தான அதிகாரிகளுக்கும் தர்மகர்த்தர்களுக்கும் சமாஜம் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளது. புதிய உறுப்பினர்களை இவ்வாண்டு சேர்த்துதவிய சைவப் பெருமக்களுக்கும், "சித்தாந்தம்" இதழைக் காலம் தாழ்த்தாது அச்சிட்டளிக்கும் சாது அச்சகத்தினர்க்கும், இவ்வாண்டு விழாக்களில் சொற்பொழிவாற்றிய அறிஞர்களுக்கும், சைவப் பணியைத் தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையத்தைப்போன்று நடத்திவரும் யாவருக்கும், சைவர்கள் எல்லோருக்கும் சமாஜம் தனது நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறது.

செயற்குழுவினர் அனுமதிப்படி,

இங்ஙனம்,

சென்னை, 25-12-61

ஜி. கலியாணம், செயலர்.
அம்பை-சங்கரன், உதவிச் செயலர்.

# கொக்கிறகு

(திரு. மு. அருணுசலம்)

சித்தாந்தம் மலர் 34 இதழ் 12 இல் கொக்கிறகு என்ற சொல்லின் பொருள் பற்றிப் பேசினேம். இது வெண்ணிறக் கொக்கிறகு மலரையே குறிப்பிடும் என்று கூறினேம். இனி இங்கு அப்பர் சுவாமிகள் தேவாரத்தில் **புள்ளின்** சிறகு என்ற தொடர் வரும் சந்தர்ப்பத்தையும் பொருளையும் ஆராய்வோம். இது அப்பர்தேவாரம் நான் காம் திருமுறை, இரண்டாம் திருப்பதிகம், இரண்டாம் பாசுரத்தில் வருகிறது.

பூண்டதோர் கேழல் எயிறும் பொன்றிகழ் ஆமைபுரள
நீண்டதிண் தோள்வலம் சூழ்ந்து நிலாக்கதிர்போல
வெண்ணூலும்
காணதகு **புள்ளின்** சிறகும் கலந்தகட்டங்கக் கொடியும்
ஈண்டு கெடிலப் புனலும் உடையார் ஒருவர் தமர்நாம்
அஞ்சுவது யாதொன்றுமில்லை அஞ்சவருவதுமில்லை.

என்பது பாசுரம். இப்பாசுரம் பிறந்த சந்தர்ப்பத்தை நினைவு கூர்தல் நலம்.

சமணருடைய தூண்டுதலால் மன்னன் உண்பித்த நஞ்சும் அப்பர் சுவாமிகளுக்கு அமுதம் ஆயிற்று. கண்ட சமணர் நடுங்கினர். அரசனிடம் சென்று, அவனுடைய "மதயானை எதிரே அப்பரை இடவேண்டும்" எனக் கூறினர். அரசனும் இசைந்தான்.

மலைபோன்ற கொலைக்களிறு ஊழித்தீ எனச்சினந்து இடியோசை செய்து அடியவர் மீது கடுகி ஓடிவந்தது. ஓடிவந்த தோற்றத்தைச் சேக்கிழார் பாடியுள்ள சந்தவிருத் தங்கள் படிக்கக் கேட்டாலே அச்சமுண்டாகும். எதிரே இருந்த அப்பர் சுவாமிகளோ, இதனினும் பல கொடுமை களைக் கண்டு அனுபவித்தவர். பல சோதனைகளில் இறை யவனுல் பாதுகாக்கப் பெற்ற வலிமை வாய்ந்தவர். ஆதலினுலே, மதக் களிற்றைக் கண்டு அவருக்கு அச்சம் எழவில்லை "நாம் அஞ்சுவது யாதொன்றுமில்லை, அஞ்சவரு வதுமில்லை" என்று பாடினுர். அவ்வாறு பாடிய பாடல்களே "சுண்ணவெண் சந்தனச் சாந்து" என்ற திருப்பதிகம்.

இனி, இந்தப் பதிகத்தின் பாடல்கள் யாவும், ஏனைய பதிகங்களினும் பார்க்க, ஒரு தனிச் சிறப்பு உடையன. இவ் வாறு சிறப்புடைய பதிகங்கள் சில. எடுத்துக் காட்டாக முதல் பதிகத்தையே கூறலாம். "என்வேதனையான

விலக்கியிடாய்'' என்ற கருத்துப் பொருந்தவே இப்பதிகத்தின் பாசுரம் ஒவ்வொன்றிலும் வேண்டுகிறார்.

அங்ஙனமே, இரண்டாம் பதிகத்தின் பாசுரம் ஒவ்வொன்றிலும் வரும் மதக் களிற்றை அஞ்சாது நோக்கி, இறைவன் தன் பராக்கிரமங்களை எடுத்துக் கூறி, "இவையுடையார் தமர்நாம், அஞ்சுவது யாதொன்று மில்லை, அஞ்ச வருவது மில்லை'' என்று பாடுகிறார். திரிபுரதகனமாகிய பராக்கிரமச் செயல் நிகழ்ந்த இடம் திருவதிகை வீரட்டானம்.

வண்ண உரிவையுடையும் அகலம் வளாய அரவும் உடையார். (1)

பூண்டதோர் கேழல் எயிறும் ஆமை புரளத்தோளும் புள்ளின் சிறகும் கட்டங்கக் கொடியும் உடையார் (2)

ஒத்த வடத்திள நாகம், மூளைத்தெழு மூவிலை வேலும், உயர் வீரட்டம் சூழ்ந்து உடையார் (3)

மான்மறி, மழு, பாம்பு, குடமால் வரைய திண்தோளும் இருநிலன் ஏற்ற சுவடும் உடையார் (4)

கலமலக்கிட்டுத் திரியும் கணபதி என்னும் களிறும் வலமேந்திரண்டு சுடரும், வான்கயிலாய மலையும் உடையார் (5)

கொள்ளி விளக்கும் துடியின் முழக்கும், பதினெண் கணமும் உடையார் (6)

கொலை வரி வேங்கை யதளும் விலையில் கபாலக்கலனும் மணியார்ந்திலங்கு மிடறும் உடையார் (7)

அறையில் அரைத்த அரவும் பாடல் பயின்ற பல் பூதம் பல்லாயிரங் கொள் கருவி நன்குயர் வீரட்டம் சூழ்ந்து உடையார் (8)

அரவத் துகிலும் யாழின் மொழியாள் அஞ்ச அஞ்சாத அரு வரை போன்ற வேழ முரித்த நிலையும் வீரட்டம் சூழ்ந்து உடையார் (9)

நரம்பெழுகைகள் பிடித்து நங்கை நடுங்க மலையை உரங்களெல்லாம் கொண்டு எடுத்தான் ஒன்பதும் அலறச் செய்வான் வீரட்டம் சூழ்ந்து உடையார். (10)

இவ்வாறு பத்து பாசுரங்களிலும் இறையவனுடைய வீரச் செயல்களைக் கூறியிருப்பதைக் காண்கிறோம். இறை

வனைத் துதிக்குங்கால் இடையே வந்த சில செய்திகளாக இவற்றைக் கொள்ள இடமில்லை. ஒவ்வொரு பாடலும் தவருது வீரச் செய்திகளையே உரைப்பதால், அப்பர் சுவாமிகள் தம்மனத்தில் சிவபெருமானுடைய வீரச் செயல்களை நினைவுக்குக் கொண்டு வந்து அச்சமின்றி இருந்தார் என்று கருதுவதே முறை.

சிறப்பாக மூன்று செய்திகளை இங்குக் கருத வேண்டும். அவர் மீது விரைந்து ஓடிவருவது கொலைக் களிறு; அந்த நிலையில் ஐந்தாம் பாடலில் "பதைத் தெழுவார் மனத்துள்ளே கலமலக் கிட்டுத்திரியும் கணபதி என்னும் களிறும் உடையார்" என்கிருர். இந்தக் களிறு உடையார் தமர் அந்தக் களிறுக்கு அஞ்சுவது இல்லை என்பது குறிப்பு. மேலும் சிவபிரான் " யாழின் மொழியாள் அஞ்ச, அஞ்சாது அருவரை என வந்த வேழம் உரித்த உரியுடையான்." அன்றியும் அவன் நங்கை நடுங்க உரங்களெல்லாம் கொண்டு மலையை எடுத்தான் தலைகள் ஒன்பதும் ஒன்றும் அலறச் செய்து வரங்கள் கொடுத்தான்" என்கிருர்.

இங்கு எடுத்துக் காட்டிய செய்திகளால் அறியவருவது, அப்பர் சுவாமிகள் இத் திருப்பதிகம் முழுமையிலும் கூறும் செய்திகள் பராக்கிரமத்தைப் புலப்படுத்தும் செய்திகளே என்பது.

ஆதலால் இரண்டாம் பாசுரத்தில் வரும் செய்தியாகிய "புள்ளின் சிறகு உடையார்" என்பதும் இத்தகைய தொன்றேயாகும். கொக்கு உருவத்தோடு வந்த ஓர் அசுரனைப் பெருமான் அழித்து, அவன் சிறகொன்றைத் தலையில் சூட்டிக் கொண்டார் என்பது பலருக்கும்தெரியாத ஒருகதை. எங்கோ ஒரு மூலையில் புராணத்தில் பயில்வது; அப்பர் சுவாமிகள் இக் கதையை அறிந்திருந்தார். பராக்கிரமத்தைக் கூறியவிடத்து இதுவும் நினைவுவரவே, இங்கு "புள்ளின் சிறகு" என்ற சொற்களால் இதைக் குறிப்பிட்டார். இது பொருத்தமுடையதே.

ஆனுல் பிற இடங்களில் யாரும் எந்தப் பாசுரத்திலும் புள்ளையோ சிறகையோ குறிப்பிடாமையால், யாருக்கும் இம் மூலக் கதை தெரியாமையால், கொக்கிறகு அசுரன் சிறகு ஆகாது. கொக்கிறகு, கொக்கிறகு மலரே அன்றி, புள்ளின் சிறகு அன்று.

# சங்க நூல்களில் சமயம்

திரு. அ. இ. பரந்தாமனார், M.A.,
தியாகராசர் கல்லூரி, மதுரை.

மக்களினத்தின் சிறப்பியல்களுள் ஒன்று சமயத்தைக் கண்ட மாண்பு. சமயம் அல்லது நெறி என்பது, மக்களுளுடைய உடல் நலத்திற்கும் உயிர் நலத்திற்கும் ஏற்ற நன்மைகளை விதித்து, மாறான தீமைகளை விலக்கி இன்ப வாழ்வு எய்துவதற்கு அமையும் அறிவு அரணாகச் சமைந்ததாகும். இச் சமய அறிவு காலத்துக்கும் அறிவுக்கும் நாட்டுச் சூழ்நிலைக்கும் ஏற்றவாறு பற்பல மாற்றங்களை அடைந்து இன்றைய நிலையை எய்தியுள்ளது. கோடிக் கணக்கான ஆண்டுகளுக்குமுன், கற்பனையாலும் கணக்கிட முடியாத காலத்திற்கு முன்பு தோன்றிய நிலவுலகில் 5 லட்சம் ஆண்டுகளாகப் படிப்படியாகக் கூர்தல் முறையில் (Evolution) வளர்ச்சியுற்ற படைப்பின் மணிமுடியாக, அறிவின் சிகரமாக, அற்புதப் பொருளாக இலங்கும் மனிதனுக்கு 25,000 ஆண்டுகளுக்கு முன்தான் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளும் பொருட்டுச் சமய அறிவு தோன்றிற்று என்றும், அச்சத்தால் ஏற்பட்ட முதல் முயற்சியே ஆதி மனிதனது சமயம் என்றும், கி. மு. 10,000 ஆண்டிலிருந்து கி. மு 3,000 வரையிலும் மனிதனது சமய எண்ணங்களில் பற்பல மாற்றங்கள் ஏற்பட்டு வந்தன என்றும், அச்சத்தால் ஆவிகளையும் பாம்புகளையும் அரிய இயற்கைப் பொருள்களையும் இறந்த வீரர்களையும் வழிபடுவதற்குரியதாக இருந்த சமயம், அறிவு வளர்ச்சியால் அன்பே சிவம் என்னும் அன்புச் சமயமாக ஏற்றமுற்றது என்றும், அறிவு முதிர்ச்சியால் உலகம், உயிர், இறைவன் எனும் மெய்யறிவு தோன்றியது என்றும் ஆராய்ச்சி அறிஞர்கள் சமய வளர்ச்சி வரலாற்றில் குறிப்பிடுகிறார்கள். இந்நிலை ஒரு குறிப்பிட்ட சமயத்துக்கு மட்டும் அன்று; உலகில் நிலவி வரும் பலப் பல சமயங்களுக்கும் பொதுவானது.

இவ்வுண்மையைச் செவ்வையாக உள்ளத்தில் இருத்தினால் தமிழகத்தின் பண்டைச் சமயத்தின் நிலையை நன்கறிதல் கூடும். தண்டமிழ நாட்டின் பண்டைச் சமயத்தைத் தெரிந்து கொள்வதற்கு உரிய நூல்களாக உள்ள

வை சங்க நூல்களேயாகும். முச்சங்கங்களைப் பற்றி மாறுபட்ட கருத்துக்கள் இருப்பினும் சங்கங்கள் இருந்து துங்கத் தமிழ் வளர்த்த செய்தியை எவரும் மறுத்தல் முடியாது. இச் சங்ககாலம் என்பது கி. மு. 3 ஆம் நூற்றுண்டிலிருந்து கி. பி. 250 வரைக்கும் உள்ள பரந்துபட்ட காலமாகும். இப் பரந்துபட்ட காலத்தில் தோன்றிய இலக்கண இலக்கியங்களையே பொதுவாகச் சங்க நூல்கள் என்கிறோம். சங்க கால நூல்கள் என்பவை தொல்காப்பியமும் பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் பதினெண் கீழ்க்கணக்கைச் சேர்ந்த திருக்குறளும் களவழி நாற்பதும் சிலப்பதிகாரக் காப்பியமுமாகும். தொல்காப்பியம் பழந்தமிழ் இலக்கண நூல். இஃது எழுத்திலக்கணத்தையும் சொல்லிலக்கணத்தையும் சொல்வதோடு, இலக்கியத்திற்குரிய வாழ்வியலையும் எடுத்துக் கூறுகிறது. இவ்விலக்கண நூல் கி. மு. 4 ஆம் நூற்றுண்டில் இயற்றப்பட்டது என்பர். எட்டுத்தொகை என்பது, அகநானூறு, புறநானூறு, குறுந்தொகை, நற்றிணை, பதிற்றுப் பத்து, பரிபாடல், கலித்தொகை ஆகிய எட்டுத் தொகுப்பு நூல்களைக் குறிக்கும். அகநானூறும் புறநானூறும் சங்க காலத்தின் முற்பகுதியில் தோன்றியவை; மற்றவை அக் காலப் பிற்பகுதியில் வெளிவந்தவை. பொருநராற்றுப் படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக் காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம், திருமுருகாற்றுப்படை ஆகிய இவை சேர்ந்த தொகுதியே பத்துப் பாட்டு எனப்படும். பரிபாடல், கலித்தொகை இவற்றைப் போலப் பத்துப்பாட்டிலிருக்கும் திருமுருகாற்றுப்படை சங்ககாலத்தின் பிற்பகுதியில் தோன்றியதாதல் வேண்டும். பதினெண் கீழ்க்கணக்கைச் சேர்ந்த திருக்குறளும் களவழி நாற்பதும் தவிர ஏனையவை மிகவும் பிற்காலத்தவை. நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரக் காப்பியம் கி. பி. 2 ஆம் நூற்றுண்டில் இயற்றப்பட்டது. மணிமேகலைக் காப்பியமோ தமிழகத்தின் இருண்ட காலம் எனப்படும் களப்பிரர் காலத்தில் தேரவாத பௌத்தம் வளர்ச்சியுற்றிருந்த நிலையில் மலிந்த சமயப் பிரசாரத்திற்காக கி. பி. 4–ஆம் நூற்றுண்டிலோ 5-ஆம் நூற்றுண்டிலோ தோன்றியதாய்

இருத்தல் வேண்டும். ஆதலால், இதனைச் சங்க நூல்களோடு சேர்த்துக் கூறுவது பொருந்தாது. இந் நூல்களைக் கொண்டு சங்க காலத்தில் தண்டமிழ் நாட்டில் நிலவியிருந்த சமய நிலையை ஒருவாறு கூறுதல் கூடும். சங்க காலச் சமயத்தைக் கூறும்போது விருப்பு வெறுப்பின்றி உண்மை நிலையை எடுத்துக் காட்டுவது தமிழக வரலாற்றுக்கு இன்றியமையாதது.

சங்க நூல்கள் தோன்றிய சங்க காலமானது, ஆரியர் நாகரிகமும் பண்பாடும், தமிழர் நாகரிகமும் பண்பாடும் பின்னிப் பிணைந்து இணைந்து விளங்கிய காலம் என்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை. ஆரியர்கள் கி. மு. 7-ஆம் நூற்றுண்டிலேயே அஃதாவது இற்றைக்கு 2,700 ஆண்டுகளுக்கு முன்னரே தமிழகத்தில் புகுந்து, கி. மு. 5-ஆம் நூற்றுண்டுக்குள் தஞ்சை, மதுரை முதலிய இடங்களில் பரவி விட்டார்கள் என்று R. G. பந்தர்கர் என்ற ஆராய்ச்சியாளர் தமது தக்காணத்தின் முன்னைய வரலாறு (The Early History of Deecan) என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார். முதல் முதல் ஆரியர் கூட்டம் ஒன்று விந்திய மலைக்கு அருகில் ஓடும் நருமதையாற்றங் கரையிலிருந்த மாகிஷ்பதி என்ற நகரத்தின் வழியாகத் தென்னகத்தில் புகுந்ததாம். அகஸ்தியர் கதை முதல் முதல் நிகழ்ந்த ஆரியர் குடியேற்றத்தையே குறிக்கிறது. வரலாற்றுப் பேராசிரியர் K. A. நீலகண்ட சாஸ்திரியார், ஆரியரது தமிழக நுழைவு கி. மு. 1000ல் நிகழ்ந்திருக்க வேண்டும் என்று தமது தென்னிந்திய வரலாறு என்னும் நூலில் கூறியிருக்கிறுர். பந்தர்கார் கருத்தை ஏற்றுக் கொண்டாலும், ஆரியர் குடியேற்றம் தமிழகத்தில் ஏற்பட்டது குறைந்தது இற்றைக்கு 2,700 ஆண்டுகளுக்கு முன்னுகும் எனலாம். தென்னகத்து நகர நாகரிகம் வடநாட்டு ஆரியர்களுடைய உள்ளத்தைக் தொன்மை மிக்க தமிழகத்திற்கு வந்து குடியேறுமாறு தூண்டியது என்று உமாயூன் கபீர், அண்ணமலைப் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவில் தமிழகச் சிறப்பினைக் கூறியபோது எடுத்துக் காட்டியிருக்கிறுர். தமிழகத்தின் பண்பாடு வந்தவர்களை வரவேற்று ஆதரித்தது. தமிழ் நாட்டு மன்னர்களும் அவர்களை ஆதரித்தார்கள். எனவே, குடியேறிய ஆரியர்

கள் அமைதியான முறையில் தங்கள் நாகரிகத்தையும் சமயக் கருத்துக்களையும் தமிழ் நாட்டில் எளிதாக வேரூன்றி நிலைத்து நிற்குமாறு பரப்பி விட்டார்கள். அவர்களுடைய வடமொழிச் செல்வாக்கும் சமுதாய வழக்கங்களும் வைதீகக் கோட்பாடுகளும் தமிழ் இலக்கண இலக்கியங்களிலும் புகுந்து விட்டன.

தொல்காப்பியரும் பொது எழுத்தான் இயன்ற வட சொல்லும் செய்யுட் செய்தற்குரிய சொல்லாகும் என்னும் கருத்தோடு,

வடசொற் கிளவி வடவெழுத்து ஒரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே''

என்று இலக்கணமும் வகுத்து விட்டார். மேலும் அவர் தமிழரது களவு மணத்தைக் கந்தருவ மணத்துக்கும் ஒப்பிட்டுக் காட்டினார். வடமொழி வேத நெறியும் தமிழகத்தில் புகுந்து விட்டது. தமிழர் சமுதாயத்தில் ஆரியருடைய கடவுள்களான திருமாலும் இந்திரனும் வருணனும் குடிபுகுந்து விட்டார்கள். தொல்காப்பியர், '' முல்லை நிலத்துக் கடவுளாக மாயோனையும், குறிஞ்சி நிலத்துக் கடவுளாக முருகப் பெருமானையும், மருத நிலத்துக் கடவுளாக வருணனையும் குறிப்பிட்டிருததலைக் காண்கிறோம். அந்நூற்பா வருமாறு:

'' மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேயமைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே. ',

இந்நிலை பழந்தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்திலேயே காணப்படுவது.

வேத நெறியும் வேள்வி செய்தலும் பண்டைத் தமிழகத்தில் நன்கு பரவி விட்டதைச் சங்க நூல்கள் மிகுதியாகத் தெரிவிக்கின்றன. '' நால்வேத நெறி திரியினும் (புறம்-2) 'அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்' (புறம்—93) 'கேள்வி முற்றிய வேள்வி அந்தணர்'

(புறம்—361) 'ஒன்று புரிந்தடங்கிய இரு பிறப்பாளர் முத்தீப் புரைய' (புறம்—367) அறுதொழில் அந்தணர் (புறம்—378), 'அவிர்சடை அந்தணர் அங்கி வேட்கும் ஆவுதி நறும்புகை' (பட்டினப்பாலை), 'அந்தி அந்தணர் அயர் (குறிஞ்சி—225வது அடி), 'ஓதல் அந்தணர் வேதம் பாட' (மதுரைக் காஞ்சி—அடி 656) ஆகிய இவ்வடிகளும் சொற்றொடர்களும் ஆரியருடைய வேத நெறியும் வேள்வி யும் பண்டைத் தமிழ் நாட்டில் பரவியிருந்த நிலையை எடுத்துக் காட்டுகின்றன; பார்ப்பனர்கள் அந்நாளிலேயே பெரிதும் மதிக்கப்பட்டதையும் தெரிவிக்கின்றன,

மேலும் தமிழ் மன்னர்கள் வேதநெறியைப் பின் பற்றி வேள்விகள் இயற்றியதைச் சங்க நூல்களில் காண் கிறோம். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவ னைச் சிறப்பித்துப் பாடிய புலவர்,

" அறுதொழில் அந்தணர் அறம்புரிந் தெடுத்த
தீயொடு விளங்கும் நாடன் "

என்று அவனுடைய நாட்டில் எங்கும் வேள்வி வேட்ட தைக் குறிப்பிட்டுள்ளார். சோழன் பெருநற்கிள்ளி இராசசூய வேள்வி செய்தான். பாண்டியன் முதுகுடுமிப் பெருவழுதி பல வேள்விகளைச் செய்து 'பாண்டியன் பல் யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி' எனப் பேரும் புகழும் பெற்றான். இப்பாண்டியனை நோக்கி நெட்டிமையார் என்ற புலவர், "நினக்கு ஒன்றாகிய வசைபட வாழ்ந் தோர் பலர் கொல், யூபம் நட்ட வியன் களம் பல கொல்" என்று பொருள் தருமாறு,

" நசைதர வந்தோர் நசைபிறக் கொழிய
வசைபட வாழ்ந்தோர் பலர்கொல் புரையில்
நற்பனுவல் நால் வேதத்து
அருஞ்சீர்த்திப் பெருங்கண்ணுறை
நெய்ம்மலி ஆவுதி பொங்கப் பன்மாண்
வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி
யூபம் நட்ட வியன்களம் பலகொல் ' (புறம் —15)

என்று வினவுவது போல் பாராட்டியுள்ளதைக் காண்கி றோம்.

(தொடரும்)

## சமாஜ நிகழ்ச்சிகள்

ம. பா. நினைவு நாள்: சமாஜத்திற்கு உயிர் கொடுத்து, சைவ சமயத்திற்குப் பெருந் தொண்டு புரிந்த உயர்திரு ம. பாலசுப்பிரமணிய முதலியார் அவர்களின் நான்காவது நினைவு நாள் கூட்டம் மயிலை வணிக வைசிய மண்டபத்தில் 1—4—62 மாலை 6–30 மணிக்குக் கூடியது. உயர்திரு. மணலி S. இராமகிருஷ்ண முதலியார் B. A. அவர்கள் தலைமை வகித்தார்கள். திருவாளர்கள் N. முருகேச முதலியார் B. A., C. N. சிங்காரவேலு M. A., P. ஆலாலசுந்தரம் செட்டியார் M. A., தி. கி. நாராயணசாமி நாயுடு, S. சச்சிதானந்தம் பிள்ளை B. A. L. T, G. கலியாணம் M. A, K. கணபதி செட்டியார், G. M. முத்துசுவாமி பிள்ளை I. A. S (Retd) முதலியவர்கள் ம. பா. அவர்களின் குணாதிசயங்களையும், அவருடைய சிறந்த சேவைகளையும் பற்றி பேசினார்கள். அவர் பெயரால் ஒரு நூல் நிலையமும், பல்கலைக்கழகத்தில் சொற்பொழிவும், அவருடைய கட்டுரைகளைத் தொகுத்து வெளியிடவும் தகுந்த ஏற்பாடுகள் செய்ய வேண்டும் என்பதையும் எல்லோரும் எடுத்துச் சொன்னார்கள். சமாஜச் செயலர் நன்றி கூற, கூட்டம் இரவு 9–மணிக்கு முடிந்தது.

## அறிவிப்பு

சில எதிர்பாராத காரணங்களால் சமாஜ அன்பர்களின் மலாயாப் பயணம் நின்று விட்டது என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

G. கலியாணம்,
சமாஜச் செயலன்.

# செய்திச் சுருக்கங்கள்

காஞ்சிபுரம் மெய்கண்டார் கழகம்: திருவேகம்பநாதர் பங்குனியுத்திரப் பெருவிழாவில் 11-3-62 முதல் 24-3-62 வரை பதினான்கு நாட்களும் ஆயிரக்கால் மண்டபத்தில் அரிய பெரிய விரிவுரைகள் நடைப்பெற்றன. திருவாளர்கள்: சே. த. இராமலிங்கம், பாலசுந்தரநாயகர், க. இராமநாத ஆச்சாரியார், வே. மு. பிரமீச முதலியார், திருமதி செய குமாரிபாஸ்கரன், க. வச்சிரவேல் முதலியார், க. சோம சுந்தரஞ் செட்டியார், சி. அண்ணாமலை முதலியார். ந. ரா. முருகவேள், க. சம்பந்த முதலியார், அறநிலையத்துணை ஆணையர் இராமலிங்க ரெட்டியார், ந. சண்முகசுந்தர தேசிகர், பூ. ஆலால சுந்தரனார், சோ. ஆறுமுக முதலியார், ச. சிவகுமாரன், எம். என். சாம்பசிவ சிவாச்சாரியார், இரத்தினசண்முக முதலியார், சி. அருணைவடிவேல் முதலி யார், ம. பொ. அண்ணாமலை முதலியார், வே. சுந்தரமூர்த்தி பாரதியார் ஆகிய பேரறிஞர்கள் பலர் சொற்பொழிவாற்றிச் சிறப்பித்தனர். செயலாளர் திரு. புலவர்மாமணி திரு. வி. திருஞானசம்பந்த முதலியார் அவர்கள் ஒவ்வொருநாளும் அறிமுகம், நன்றி, வாழ்த்துரை முதலியன வழங்கிச் சிறப்பித்தார்கள்.

அறிவிப்பு: காஞ்சிபுரம் மெய்கண்டார் கழகத்தினின்று ஆண்டுதோறும் வெளிவரும் வழக்கம்போல, இவ்வாண்டு அறுபத்துமூவர் திருநட்சித்திர படம் வெளிவந்துள்ளது. வேண்டுவோர் "32, மண்டபத்தெரு, காஞ்சிபுரம்" என்னும் முகவரிக்கு 16 நயாபைசா தபால் தலைகள் அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம்.

## சைவசித்தாந்த சபை, திரிசிரம்:

### "காரைக்காலம்மையார் திருநாள்"

24-3-62ல் "காரைக்காலம்மையார் திருநாள்" திரிசிரப்புரச் சைவ சித்தாந்த சபையினரால் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அவ்வமயம் திருநெல்வேலி மங்கையர்க்கரசி மாதர்கழகச் செயலாளர் "சிவநெறிச் செல்வி" திருவாட்டி. ஞா. உலகம்மாள் அவர்கள் "அம்மையார் திருமுறை" என்பது பொருளாக விரிவுரை நிகழ்த்தினார்கள். சபைச்செயலாளர் திரு. சிவப்பிரகாசம் நன்றி கூறினார்.

---

Printed at the Sengunthamithran Press, 33, Armenian St., Madras-1 by V. Sambandan, Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. and Published by S. Satchidanandam Pillai, B.A., L.T., for the Saiva Siddhantha Maha Samajam, 12, East Mada St., Mylapore, Madras-4.